(*b*) The contributions were made for a variety of purposes, including buildings, roadworks, wells, purchase of library books, supply of agricultural implements, and supply of equipment to children's parks.

9-20 a.m. SRI M. JAGANNATHAN : In view of the fact that in some poor villages, the villagers find it very difficult to contribute anything in terms of money, will the Government consider the desirability of accepting contribution in the form of labour and executing the works under the National Extension Service and Community Development Schemes?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : As a matter of fact, labour is more welcome than contribution in cash. Therefore, if anybody is willing to contribute labour, it is welcome.

SRI A. GOVINDASAMY : தேசிய விஸ்தரிப்புத் திட்ட பகுதிகளில், ஜில்லா போர்ட் கொடுக்க வேண்டிய பங்குத் தொகை கொடுக்கப்படாததால்தான் அது தடைபட்டுப் போகிறது. பொது மக்கள் கால் பாகம் கட்டினால் போதுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : தேசிய விஸ்தரிப்புத் திட்டம் ஜில்லா போர்டிற்கு வருவதில்லை. ஸ்தல அபிவிருத்தித் திட்டத்திற்குத் தான் ஜில்லா போர்ட் கொடுப்பது என்று முன்பு இருந்தது. இப்பொழுது அதுவும் நிறுத்தப்பட்டிருக்கிறது.

*Showing of news reels in cinemas*

*872 Q.—SRI P. G. MANICKAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) ஒவ்வொரு சினிமா படக்காட்சியிலும் எத்தனை நிமிஷங்கள் வரைக்கும் செய்திக் கதிர் பிலிம்கள் காட்டப்படுகின்றன ?

(ஆ) ஒவ்வொரு சினிமா பட செய்திக் கதிர் காட்சியில் எத்தனை நிமிஷங்கள் வரை மத்திய அரசாங்க விளம்பர செய்திகள் காட்டப்படுகின்றன ?

(இ) சென்னை அரசாங்க விளம்பர செய்திகள் எத்தனை நிமிஷங்களுக்குக் காட்டப்படுகின்றன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Section 6 of the Madras Cinemas (Regulations) Act, 1955, directs that the licensees should exhibit such news reels not exceeding two thousand feet or for not more than one-fifth of the entire time taken for any show. Generally the news reels will have a running time approximately ranging from 11 to 18 minutes.

(*b*) & (*c*) The news reels sown in the cinemas are supplied exclusively by the Films Division, Government of India, Ministry of Information and Broadcasting. The Films Division does not deal with publicity films. Hence the questions do not arise.

SRI P. G. MANICKAM : சினிமாவில் காட்டுகிற செய்திக் கதிரில் அநேகமாக வட இந்தியாவில் நடக்கிற அபிவிருத்தித் திட்ட வேலைகள் தான் காட்டப்படுகின்றன. நமது சென்னை மாகாணத்தில் நடைபெறுகிற அபிவிருத்தித் திட்டங்கள் இதில் அநேகமாக காட்டப்படுகிறதில்லை. ஆகவே சென்னை மாகாண அபிவிருத்தி திட்ட வேலைகளை அதிகப்படியாக காட்டுவதற்கு அதிக நேரம் ஒதுக்குவதற்கும், இங்கு இருக்கும் திட்ட வேலைகளைப்பற்றி கூடுதல் பிலிம்ஸ் எடுக்கவும் சென்னை சர்க்கார் இந்திய சர்க்காருக்கு சிபார்சு செய்யுமா ?

5th November 1958]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சென்னை அரசாங்கத்தின் அபிவிருத்தித் திட்டங்களும் காட்டப்படுகின்றன. ஆனால், 14 ராஜ்யங்களில் இது ஒன்று. எல்லா ராஜ்யங்களிலும் உள்ள அபிவிருத்தி வேலைகள் காட்டப்படலாம். தனி நபர்கள் உற்பத்தி செய்யும் படங்கள் இதில் காட்டப்படுவதில்லை. இது வரையில், இம்மாதிரி, காட்டப்பட்டது, "புதிய சமுதாயம்", "அவர் லெஜிஸ்லேச்சர்" என்ற இரண்டு படங்கள்தான் இங்கு தயாரிக்கப்பட்டு காட்டப்பட்டது. மற்றவையெல்லாம் மத்திய சர்க்கார் பிலிம்ஸ் டிவிஷனில் தயாரிக்கப்படும் "நியூஸ் ரிலீஸ்" தான்.

SRI A. V. P. ASAITHAMBI : செய்தி கதிர் படங்களில், எல்லா மாகாணச் செய்திகளும் சேர்ந்திருக்கவேண்டும். சென்னை சட்டமன்ற அங்கத்தினர்கள் ஹாஸ்டல் தின நிகழ்ச்சியை படமாக்கினார்கள். ஆனால் இது வரையில் அது செய்திக் கதிரில் காட்டப்பட்டதாக தெரியவில்லை அப்படி, அது காட்டப்படாததற்காக எடுக்கப்பட்டிருக்குமானால் இது அனுவசியந்தானே. இல்லையெனில் அது காட்டப்பட முயற்சிகள் எடுக்கப் படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எனக்கு தெரிந்த வரையில், சட்டமன்ற அங்கத்தினர்களின் ஹாஸ்டல் தினவிழாவை படம் எடுத்தது, நமது பாலிடெக்னிக்தான். பிலிம் டிவிஷன் அதை எடுக்கவில்லை. அப்படி எடுத்திருந்தால் அல்லது எடுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தால் அதுவும் காட்டப்பட்டிருக்கும்.

SRI K. B. S. MANI : இந்தியாவிலேயே சென்னை மாகாணந்தான் முதற்படியாக இருக்கிறது, எலெக்ட்ரிசிட்டி விஷயமாகவும், ரோடு விஷயமாகவும், ஆகவே இந்த அபிவிருத்தித் திட்டங்களை சென்னை மாகாண மக்களுக்கு எடுத்துக் காட்டுவதற்காக ஒரு தனி பிலிம் டிவிஷனை சர்க்காரே ஏற்படுத்தி படங்கள் எடுத்து மக்களுக்கு அவைகளைப்பற்றி நன்கு விளங்கும் அளவிற்கு தெளிவாக காட்டுவதற்கு, அவைகளை சினிமா கொட்டகைகளில் விநியோகம் செய்து அதனால் சர்க்காருக்கு ஏற்படுகிற நஷ்டத்தை ஈடு செய்ய, சினிமா கொட்டகைக்காரர்கள் அதிகமாக லாபம் அடிக்கும் பணத்தில் இருந்து வசூல் செய்ய முயற்சிகள் எடுக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நமது ரோடுகள், மின்சார வசதி இவைகளின் அருமை நமது மக்களுக்கு தெரியும். ஆகவே மற்றவர்கள்தான் அதை பார்க்கவேண்டும். அதற்காக படம் பிடிக்கவேண்டியதில்லை. அவசியமில்லை. இருந்த போதிலும் என்னென்ன வகைகளில் நமது ராஜ்ய அபிவிருத்தித் திட்டங்களைப் பற்றி படங்கள் காட்டமுடியும் என்பதில் கவனம் செலுத்தப்படுகிறது.

SRI M. P. SUBRAMANIAM : சினிமா படங்களில் பெரும்பாலும் காட்டப்படுவது வட இந்தியாவில் உள்ள திட்டங்கள்தான் என்று குறிப்பிட்டபோது, உண்மையான முன்னேற்றம் எந்தெந்த பகுதிகளில் தென்படுகிறதோ அவைகளைத்தான் சினிமா படங்களில் காட்டவேண்டுமென்பது மத்திய சர்க்கார் கொள்கையா ? அப்படியென்றால் தென்னாட்டில் கணிசமான முன்னேற்றம் ஏற்படவில்லை என்பதை மத்திய அரசாங்கம் ஒப்புக் கொள்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நமது ராஜ்யம் 14-ல் ஒன்று. அதிகமாக மற்ற ராஜ்யங்களில் உள்ள அபிவிருத்தித் திட்ட வேலைகளைத்தான் காட்டுகிறார்கள். அவைகளைக் காட்டுவதினால் நமக்கு நன்மையுண்டு. வட நாட்டில் இவ்வளவு எல்லாம் செய்கிறார்களே அதேபோல் இங்கும் செய்யப்படவேண்டுமென்று கிளர்ச்சி செய்ய இடமுண்டு. ஆகவே இது வரவேற்கத்தக்கதுதான். (சிரிப்பு.)